15711



පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus



OLD

33 T I

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

ඉතිහාසය I
வரலாறு I
History I

පැය එකයි
ஒரு மணித்தியாலம்
One hour

**கவனிக்க:**
(i) **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக. இவ் வினாத்தாளுக்கு **80** புள்ளிகள் வழங்கப்படும்.
(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
(iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை உரிய வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
(iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

**1.** கடந்த காலம், நிகழ்காலம் மற்றும் எதிர்காலத்துக்கிடையிலான தொடர்புகளின் மூலம் வரலாறு என்றால் என்ன என்பதை வரைவிலக்கணப்படுத்த முயன்ற வரலாற்றாசிரியராகக் கருதப்படுபவர்,
(1) ஜவஹர்லால் நேரு (2) வின்ஸ்டன் சேர்ச்சில் (3) ஈ. எச். கார் (4) ஜீ. எம். ரெவ்லியன்

**2.** பின்வரும் தகவல்கள் இலங்கையின் எம்மூலாதாரத்திற்குரியவையாகும்?
- புராதன வம்சக் கதையாகவுள்ளமை
- தகவல்கள் சுருக்கமாகக் குறிப்பிடப்பட்டுள்ளமை
- கி.பி. நான்காம் நூற்றாண்டளவில் எழுதப்பட்டமை

(1) போதிவம்சம் (2) தூபவம்சம் (3) தீபவம்சம் (4) மகாவம்சம்

**3.** இந்நாட்டின் வரலாற்றுக்கு முற்பட்ட கால மனிதனின் வாழ்க்கை பற்றிய தகவல்களைக் கட்டியெழுப்புவதற்கு வழிகாட்டும் மூலாதாரம் எது?
(1) நாட்டுப்புறக் கதைகள் (2) கல்லாயுதங்கள்
(3) வம்சக்கதைகளின் தகவல்கள் (4) கட்டட இடிபாடுகள்

**4.** மலைநாட்டின் அரசியல், சமூக, பொருளாதாரத் தகவல்களடங்கிய நூலை எழுதிய வெளிநாட்டவர் யார்?
(1) பாகியன் தேரர் (2) வண. பிதா க்வேரோஸ் (3) பிரகோபியஸ் (4) றொபர்ட் நொக்ஸ்

**5.** அனுராதபுர காலத்தின் முன்னரைப்பகுதியில் பரவலாகக் காணக்கூடியது எவ்வகைக் கல்வெட்டுக்களாகும்?
(1) குகைக் கல்வெட்டுக்கள் (2) பாறைக் கல்வெட்டுக்கள்
(3) தூண் கல்வெட்டுக்கள் (4) பலகைக் கல்வெட்டுக்கள்

**6.** இலங்கையைப் பற்றிய தகவல்களையும் உள்ளடக்கிய இண்டிகா எனும் நூலை எழுதிய சந்திரகுப்த அரசனின் கிரேக்கத் தூதுவர் யார்?
(1) ப்லீனி (2) தொலமி (3) மெகஸ்தினிஸ் (4) இபன் பதுதா

**7.** வம்சக் கதைகளின்படி, விஜயன் உள்ளிட்ட குழுவினர் தமது குடியேற்றங்களுக்காகத் தெரிவுசெய்த நதிகள் இரண்டு,
(1) களனி கங்கை, வளவை கங்கை (2) மல்வத்து ஓயா, கலா ஓயா
(3) கல்லோயா, யான் ஓயா (4) மகாவலி கங்கை, கிரிந்தி ஓயா

**8.** கம்பீர நதிக்கருகாமையில் குடியேற்றத்தை நிர்மாணித்த விஜய அரசனின் அமைச்சர்
(1) அனுராத (2) விஜித (3) உபதிஸ்ஸ (4) உருவேல

**9.** கீழே தரப்பட்டுள்ள வரலாற்றுச் சம்பவங்கள் அவை ஏற்பட்ட ஒழுங்கில் வரிசைப்படுத்தும்போது கிடைக்கும் சரியான விடை யாது?
A – கந்தளாய் மற்றும் கிரிதலை வாவியின் நிர்மாணம்
B – புனித வெள்ளரசு மரக்கிளையை நாட்டுதல்
C – பராக்கிரம சமுத்திரத்தை அமைத்தல்
D – திரிபீடகம் எழுதப்படல்

(1) B, D, A, C (2) D, B, A, C (3) B, C, D, A (4) D, A, C, B

[பக். 2 ஐப் பார்க்க.

**10.** அனுராதபுர காலத்தின் ஆரம்பத்தில் இந்தியாவுக்கும் இலங்கைக்குமிடையில் நிலவிய உறவில் முக்கிய பண்புகளாவன
(1) ஆக்கிரமிப்புக்கள் இடம்பெற்றமை (2) இடப்பெயர்வுகள் இடம்பெற்றமை
(3) வர்த்தகத் தூதுவப் பயணம் இடம்பெற்றமை (4) கலாசாரத் தூதுவப் பயணம் இடம்பெற்றமை

**11.** பல்வேறு வெளிவாரியான செல்வாக்குகள் காணப்பட்ட போதிலும் இலங்கைக்கென சிறப்பான தனித்துவத்தைக் கட்டியெழுப்ப முடிந்தமைக்கான காரணம்,
(1) இந்தியாவுக்கு அண்மையில் அமைந்திருத்தல் (2) புராதன கப்பற் பாதையின் மத்திய நிலையமாக இருத்தல்
(3) இந்து சமுத்திரத்தின் மத்தியில் அமைந்திருத்தல் (4) ஒரு தீவாகக் காணப்படல்

**12.** இலங்கையின் உலர்வலயத்தில் குடியேறி சீவனோபாயமாக விவசாயத்தைத் தெரிவுசெய்த ஆரம்ப ஆரியக் குடியேற்றவாசிகள் எதிர்நோக்கிய முக்கிய சவால் எது?
(1) புதிய குடியேற்றங்களுக்காகக் காடுகளை அழிப்பதில் ஏற்பட்ட அசௌகரியங்கள்
(2) கிடைத்த மழைவீழ்ச்சி நிச்சயமற்றிருந்ததால் உணவுற்பத்தியில் தடையேற்பட்டமை
(3) உலர்வலயத்தின் காலநிலை குடியேற்றவாசிகளுக்குப் பழக்கமில்லாமை
(4) புதிய சூழ்நிலையானது தமது சீவனோபாயத்திற்கு உகந்ததாக இல்லாமை

**13.** அனுராதபுர காலத்தில் இந்தியாவைப் போன்று தீவிரமான சாதிவேற்றுமை இலங்கையில் **காணப்படாமைக்கான** காரணமாக அமைவது,
(1) மன்னர்கள் நாட்டு மக்கள் அனைவரையும் சமமாகக் கருதியமை
(2) நாட்டு மக்களிடையே சாதிவேற்றுமை பற்றிய அறிவின்மை
(3) மக்கள் எந்தவொரு பேதமுமின்றி ஐக்கியமாக வாழ்ந்தமை
(4) பௌத்த தர்மத்தின் போதனைகள் சமூகத்தில் பரவியமை

**14.** இந்நாட்டில் நிகாய பேதங்கள் (பௌத்த சமய பீடங்கள்) ஏற்பட அடிப்படையாக அமைந்த துறவிமடங்கள் (ஆராமைகள்),
(1) மஹா விகாரையும் தூபாராமயவும் (2) அபயகிரியும் ஜேதவனாராமையவும்
(3) திஸ்ஸமஹாராமயவும் லங்காராமயவும் (4) மிரிசவெட்டியவும் உத்தராராமயவும்

**15.** பின்வரும் நிரல் **I** இல் இலங்கையின் சிறப்புமிக்க வாவிகள் சிலவும் நிரல் **II** இல் அவற்றின் சிறப்பிற்கான காரணங்களும் தரப்பட்டுள்ளன.

| நிரல் **I** | நிரல் **II** |
|---|---|
| (i) அபய வாவி | A - வாவிகள் சிலவற்றை ஒன்றிணைத்து நிர்மாணிக்கப்பட்டுள்ளமை |
| (ii) திசா வாவி | B - நகரத்தின் நீர்த்தேவைக்கு முன்னுரிமையளித்து நிர்மாணிக்கப்பட்டுள்ளமை |
| (iii) பராக்கிரம சமுத்திரம் | C - மலைகள் இல்லாத பிரதேசமொன்றில் வில்வடிவிலான அணைக்கட்டு நிர்மாணிக்கப்பட்டுள்ளமை |
| | D - அரச அனுசரணையுடன் நிர்மாணிக்கப்பட்ட முதலாவது வாவி |

நிரல் **I** ஐ நிரல் **II** உடன் பொருத்தும்போது பெறப்படும் சரியான விடை யாது?
(1) D, B, A (2) B, C, D (3) B, D, A (4) C, B, A

**16.** குளக்கட்டில் நீர்க்கசிவு ஏற்படுவதைத் தவிர்ப்பதற்காக குவாட்சயிட் பாறைகளின் மேல் நிர்மாணிக்கப்பட்டுள்ள வாவிக்கான உதாரணமாக அமைவது,
(1) பதவிய வாவி (2) நாச்சதூவ வாவி (3) மின்னேரியாக் குளம் (4) கிரிதலை வாவி

**17.** கி.பி ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த அரண்மனைப் பெண்களின் அலங்காரம் பற்றி விளக்கத்தைப் பெற்றுக்கொள்வதற்கு உதவக்கூடியதெனக் கருதப்படுவது,
(1) தொல்பொருள் அகழ்வுகளின்போது கிடைத்துள்ள ஆபரணங்கள்
(2) பொலன்னறுவையின் திவங்க படிமனை சித்திரங்கள்
(3) தெகல் தொருவ விகாரையிலுள்ள சித்திரங்கள்
(4) சீகிரிய சுவரோவியங்கள்

**18.** பின்வரும் சம்பவங்களில் தம்பதெனிய இராசதானிக் காலத்தில் இலங்கைக்கு வந்த சுற்றுலாப் பயணியொருவரால் கேட்க **முடியாத** சம்பவமொன்றைக் கொண்ட விடை எது?
A – காலிங்க மாகனின் ஆக்கிரமிப்பு B – துட்டகைமுனு எல்லாளன் போர்
C – செங்கோ செனவியின் ஆக்கிரமிப்பு D – மின்னேரியாக் குளம் கட்டப்படல்
E – யாழ்ப்பாண ஆட்சியாளராக சப்புமல் இளவரசன் நியமிக்கப்படல்
(1) C, E (2) A, E (3) A, C (4) B, D

**19.**
- கல்வெட்டுக்கள் மூலம் கலிங்க வம்சத்தின் பெருமைகள் கூறப்படல்
- துலாபாராக் கொடைகளை வழங்குதல்
- நாட்டு மக்களுக்கு நிவாரணங்களை வழங்குதல்

மேலுள்ள தகவல்களுடன் தொடர்புபட்ட பொலன்னறுவை ஆட்சியாளர் யார்?
(1) முதலாம் விஜயபாகு மன்னன் (2) சாகசமல்ல மன்னன்
(3) முதலாம் பராக்கிரமபாகு மன்னன் (4) கீர்த்தி ஸ்ரீ நிஸ்ஸங்கமல்ல மன்னன்

**20.** பின்வரும் A தொடக்கம் D வரையான தகவல்கள் எந்த இராசதானிக்குரியவையாகும்?

A – தலைநகரமாவதற்கு முன்பு துணைநகரமாகக் காணப்பட்டமை

B – சிவனொளிபாதமலை (ஸ்ரீபாத) வீதி சந்திக்குமிடத்தில் அமைந்திருத்தல்

C – மகாவலி கங்கை பாய்ந்தோடும் பள்ளத்தாக்கின் கரையில் அமைந்திருத்தல்

D – மலைகள் சிலவற்றால் சூழப்பட்டு சமதரையான நிலத்தில் அமைந்திருத்தல்

(1) யாப்பகூவ (2) குருநாகல் (3) கம்பளை (4) தம்பதெனிய

**21.** பின்வரும் கூற்றுகளில் யாழ்ப்பாண அரசு பற்றிய **உண்மையற்ற** கூற்றைத் தெரிவு செய்க.

(1) யாழ்ப்பாண அரசின் தலைநகர் நல்லூர் ஆகும்.

(2) யாழ்ப்பாண அரசு விஜய நகரப் பேரரசின் கீழ் காணப்பட்டதாக தென்னிந்திய மூலாதாரங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

(3) போர்த்துக்கேயர் கறுவாவைப் பெற்றுக் கொள்வதற்காக யாழ்ப்பாண அரசு மீது கவனத்தைச் செலுத்தினர்.

(4) வல்லிபுரம் பொற்றகட்டில் யாழ்ப்பாணத்தின் தொன்மையான தகவல் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

**22.** வியாபாரம், சமயம் பரப்புதல் அடிப்படையில் இந்து சமுத்திர வலயத்திற்கு வந்த ஆரம்ப ஐரோப்பிய இனத்தவர்

(1) பிரான்சியர் (2) போர்த்துக்கேயர் (3) ஒல்லாந்தர் (4) டென்சியர்

**23.** மலைநாட்டு இராசதானியின் அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்காகப் போர்த்துக்கேயர் பின்வருவனவற்றில் எந்த வழிமுறையைப் பின்பற்றினர்?

(1) பௌத்த பிக்குகளின் ஒத்துழைப்பைப் பெறுவதற்கு நடவடிக்கை எடுத்தல்

(2) கத்தோலிக்க சமயத்தை மலைநாட்டுப் பகுதிகளில் பிரசாரப்படுத்துதல்

(3) கோணப்பு பண்டாரவுக்கு மலைநாட்டு அரசர் பதவியைப் பெற்றுக்கொள்ள உதவுதல்

(4) மலைநாட்டு சிம்மாசனத்துக்கு உரிமைகோரிய குசுமாசன தேவியை அரியணையில் அமர்த்துதல்

● பின்வரும் A, B, C, D மூலம் மலைநாட்டு அரசர்கள் மற்றும் ஒல்லாந்தருக்கிடையே மேற்கொள்ளப்பட்ட ஒப்பந்தங்கள் பற்றிய தகவல்கள் காட்டப்பட்டுள்ளன. அவற்றை வாசித்து 24, 25 ஆம் வினாக்களுக்கு விடை தருக.

| ஆண்டு | மன்னர் | ஒப்பந்தத்தின் சரத்துக்கள் |
|---|---|---|
| 1638 | A - கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்கன் | C - போர்த்துக்கேயரை விரட்டுவதற்கு ஒல்லாந்தர் மன்னனுக்கு உதவ வேண்டும். |
| 1766 | B - இரண்டாம் இராஜசிங்கன் | D - கடற்கரையிலிருந்து 4 மைல் (ஒரு கவ்வ) அகலமான பிரதேசத்தை ஒல்லாந்தருக்கு வழங்குதல் வேண்டும். |

**24.** 1638 மலைநாட்டு போர்த்துக்கேய ஒப்பந்தம் பற்றிய தகவல்களைக் காட்டும் விடையாக அமைவது,

(1) B, C (2) A, C (3) B, D (4) A, D

**25.** 1766 மலைநாட்டு ஒல்லாந்த ஒப்பந்தம் பற்றிய தகவல்களைக் காட்டும் விடையாக அமைவது,

(1) A, C (2) B, D (3) A, D (4) B, C

● பின்வரும் A, B, C, D இல் காணப்படுபவை மலைநாட்டு இராசதானிகளுடன் தொடர்புடைய வரலாற்றுத் தகவல்கள் சிலவாகும். இவற்றை அடிப்படையாகக் கொண்டு 26, 27 ஆம் வினாக்களுக்கு விடை எழுதுக.

A – நாயக்கர் வம்சத்திற்கு மலைநாட்டு அரசர் பதவி உரித்தாதல்

B – கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்க மன்னனின் காலத்தில் மலைநாட்டு சியம் நிகாய (பௌத்த சமய பீடம்) ஆரம்பிக்கப்படல்

C – முதலாம் இராஜசிங்க மன்னன் மலைநாட்டை ஆக்கிரமித்தல்

D – குசுமாசன தேவி தோன கத்தரினா எனும் பெயரில் ஞானஸ்நானம் பெறல்

**26.** மேற்படி சம்பவங்களை சரியான வரலாற்று ஒழுங்குமுறையில் காட்டும் விடை எது?

(1) D, A, C, B (2) C, D, A, B (3) C, A, D, B (4) D, C, A, B

**27.** A எழுத்தினால் காட்டப்படும் வரலாற்றுச் சம்பவத்துடன் தொடர்புடைய மன்னன் யார்?

(1) ஸ்ரீ வீர பராக்கிரம நரேந்திரசிங்க (2) இராஜாதி இராஜசிங்க

(3) ஸ்ரீ விஜய இராஜசிங்க (4) கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்க

● பின்வரும் A இலிருந்து F வரையான தகவல்களைக் கொண்டு 28, 29 ஆம் வினாக்களுக்கு விடை தருக.

| செல்வாக்குச் செலுத்திய காரணி | தலைவர் | ஆளுநர் |
|---|---|---|
| A - அரசின் தூரநோக்கற்ற வரிக்கொள்கை | C - கெப்பற்றிப்பொல திசாவை | E - டொரிங்டன் பிரபு |
| B - பிரபுக்களின் சலுகைகள் நீக்கப்படுதல் | D - கெங்காலேகொட பண்டா | F - ரொபர்ட் பிரவுண்றிக் |

**28.** கி.பி. 1818 ஆம் ஆண்டு சுதந்திரப் போராட்டத்துடன் தொடர்புடைய தகவல்களாவன,

(1) B, D, F (2) A, C, F (3) A, D, E (4) B, C, F

**29.** கி.பி. 1848 ஆம் ஆண்டு சுதந்திரப் போராட்டத்துடன் தொடர்புடைய தகவல்களாவன,

(1) B, D, F (2) A, D, E (3) B, C, E (4) A, C, E

[பக். 4 ஐப் பார்க்க.

**30.** கி.பி. 1848 ஆம் ஆண்டு ஆரம்பித்த பிரித்தானியருக்கெதிரான கிளர்ச்சிகளின் விளைவாக இந்நாட்டின் கிராமப்புற மக்களின் நன்மை கருதி பிரித்தானிய ஆட்சியாளர்கள் எடுத்த முக்கிய நடவடிக்கை எது?
(1) இந்நாட்டின் செல்வந்தருக்கு வியாபாரத்தை ஆரம்பிக்க உதவுதல்
(2) ஆங்கிலக் கல்விக்கான பாடசாலைகளின் எண்ணிக்கையை அதிகரித்தமை
(3) கிராமிய விவசாயத்தை முன்னேற்றுவதற்கு நடவடிக்கை எடுத்தமை
(4) தீவின் பிரதான நகரங்களைப் பெரும் வீதிகளால் இணைத்தமை

**31.** கீழே காட்டப்பட்டுள்ள தகவல்களில் முழு இலங்கையும் ஒரு தேர்தல் தொகுதியாகக் கருதி நடத்தப்படும் சந்தர்ப்பம் எது?
A – ஜனாதிபதித் தேர்தல் B – மாகாண சபைத் தேர்தல்
C – பிரதேச சபைத் தேர்தல் D – பொதுசன அபிப்பிராய வாக்கெடுப்பு
E – பொதுத் தேர்தல்
(1) B, D (2) A, D (3) C, E (4) A, E

**32.** இருக்கு வேத சமயத்தின் நம்பிக்கைகளின் முக்கிய இயல்பு
(1) தியானத்திற்கும் துறவறத்திற்கும் முதலிடம் வழங்குதல்
(2) மும்மூர்த்திகளை வணங்குதல்
(3) பெண் தெய்வங்களை வணங்குதல்
(4) இயற்கையை தெய்வமாகக் கருதுதல்

**33.** அசோகச் சக்கரவர்த்தியின் அரசியற் கொள்கையில் மாற்றமேற்படக் காரணமாக அமைந்த முக்கிய விடயம்,
(1) வணக்கத்துக்குரிய மோகலிபுத்த திஸ்ஸ தேரரின் வழிகாட்டலும் ஆலோசனைகளும் கிடைத்தமை
(2) தர்ம மஹாமாத்ராவின் முறையான வழிகாட்டல்
(3) கலிங்கப் போரில் ஏற்பட்ட மாபெரும் உயிரிழப்புக்கள்
(4) பௌத்த சமயத்தைத் தழுவியதால் ஏற்பட்ட தர்மக் (நீதியான) கொள்கை

**34.** ஐரோப்பாவில் நிலவிய மானியமுறை ஆட்சியினால் அதிகளவு சலுகைகளை அனுபவித்தோர்,
(1) மன்னர் (2) பிரபுக்கள் (3) நைட்கள் (4) சமயக் குருமார்

**35.** உலகப் புகழ்பெற்ற நாலந்தா மற்றும் வலபி பல்கலைக்கழகங்கள் வளர்ச்சியுற்றது,
(1) இருக்கு வேத காலத்தில் ஆகும். (2) பின் வேத காலத்தில் ஆகும்.
(3) மௌரியப் பேரரசு காலத்தில் ஆகும். (4) குப்தப் பேரரசு காலத்தில் ஆகும்.

**36.** தில்லி சுல்தானியப் பேரரசின் ஆரம்ப ஆட்சியாளர்
(1) குத்தூப் - உதீன் - ஐபெக் (2) அலாவுதீன் கல்ஜி
(3) மொஹமட் - பின் - துக்ளக் (4) மாமன்னர் அக்பர்

**37.** ஜப்பானில் நிலவிய மானியமுறை ஒழிக்கப்பட்டது எவரது ஆட்சிக்காலத்தில்,
(1) டொகுகாவா இயாசு (2) நொம்புநகா
(3) ஹிதேயோசி (4) முட்சுகிதோ பேரரசன்

**38.** 'முதலாளித்துவம்' உலகம் முழுவதும் பரவுவதில் ஏதுவாயமைந்த தலையிடாக் கொள்கை எனும் தத்துவத்தை முன்வைத்தவர்,
(1) கால்ஸ் மாக்ஸ் (2) ஜெரமி பெந்தம்
(3) ஜோன் ஸ்டுவர்ட் மில்ஸ் (4) அடம் ஸ்மித்

**39.** கி.பி. 1857 ஆம் ஆண்டு இந்திய சிப்பாய் கலகத்தின் முக்கிய விளைவாக அமைந்தது.
(1) பிரித்தானிய வர்த்தக சங்கத்தின் ஆட்சி முடிவுறுத்தப்பட்டு இந்தியா பிரித்தானிய முடிக்குக் கீழ் கொண்டு வரப்பட்டமை
(2) இந்திய தேசிய காங்கிரஸ் உருவானமை
(3) இந்தியர்களிடையே தேசப்பற்று அதிகரித்தமை
(4) பிரித்தானியர் இந்தியாவுக்கு சுதந்திரம் வழங்கியமை

**40.** ஐக்கிய அமெரிக்க ஜனாதிபதி வூட்ரோ வில்சன் அவர்களின் தலைமையில் நிறுவப்பட்டது,
(1) சர்வதேச சங்கம் (2) ஐக்கிய நாடுகள் தாபனம்
(3) நேட்டோ அமைப்பு (4) வோர்சோ அமைப்பு

* * *

OL/2017/33-T-II (OLD) 15707



පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus

OLD



33 T II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

ඉතිහාසය II
வரலாறு II
History II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

* பகுதி I இன் **முதலாம்** வினா கட்டாயமானது.
* பகுதி II இலிருந்து **மூன்று** வினாக்களுக்கும் பகுதி III இலிருந்து **இரு** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* எல்லாமாக **ஆறு** வினாக்களுக்கு விடை எழுதுக.

## பகுதி I

**1.** **(அ)** கீழே (i) இல் குறிப்பிடப்பட்டுள்ள வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இடங்கள் **அனைத்தையும்** தரப்பட்டுள்ள இலங்கைப் புறவுருவப்படத்திலும் (ii) இல் குறிப்பிடப்பட்டுள்ள வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இடங்கள் **அனைத்தையும்** தரப்பட்டுள்ள உலகப் புறவுருவப்படப் பகுதியிலும் குறித்துப் பெயரிடுக.

(i) யோத வாவி, கால்க நதி, புலதிசிபுர, ஜம்புகோளப்பட்டினம், கச்சரகாமம், மஹா கணதரா வாவி, மஹியங்கனை, ரிட்டிகல, கிரிந்த, மட்டக்களப்பு நகரம் (10 புள்ளிகள்)

(ii) பாரசீக வளைகுடா, தாம்ரலிப்தி, இமய மலை, உரோமாபுரி, யாவா தீவுகள், செங்கடல், லிஸ்பன், ஜெருசலம் (08 புள்ளிகள்)

**(ஆ)** (i) கீழே A, B, C, D யில் காட்டப்பட்டுள்ள வரலாற்றுத் தகவல்களுடன் தொடர்பான நபர்கள்/இடங்கள் யாவர்/யாவை என்பதை ஒழுங்குமுறையில் உங்கள் விடைத்தாளில் எழுதுக.

A - வரலாற்றில் முதற்றடவையாக பட்டாபிஷேகம் (முடிசூட்டு விழா) நடத்திய இலங்கை மன்னன்

B - லியனாடோ டாவின்சியினால் வரையப்பட்ட உலகப் புகழ்பெற்ற பெண் ஓவியம்

C - விஜயன் உள்ளிட்ட ஆரியக் குழுவினர் இலங்கையில் வந்திறங்கிய பிரதேசம்

D - உருகுணை அரசின் தலைநகரம் (04 புள்ளிகள்)

● A மற்றும் B யினால் காட்டப்பட்டுள்ள படங்களை அவதானித்து, தரப்பட்ட வினாக்களுக்கான விடைகளை ஒழுங்குமுறையில் உங்கள் விடைத்தாளில் எழுதுக.

(ii) 1. 'A' இனால் காட்டப்படும் நிர்மாணத்தின் பெயர் என்ன?
2. இதனைக் கட்டிய அரசன் எந்த அரச வம்சத்தைச் சேர்ந்தவர்?
3. இந்தியாவின் எந்த நதிக்கரையில் இது கட்டப்பட்டுள்ளது?
4. யாரின் நினைவாக இது கட்டப்பட்டுள்ளது? (04 புள்ளிகள்)



A

(iii) 1. 'B' படத்தில் காட்டப்பட்டுள்ள இலங்கை இராஜதந்திரியின் பெயர் என்ன?
2. இவர் ஆரம்பித்த அரசியல் கட்சியின் பெயரைத் தருக.
3. இவர் இலங்கையின் எந்த அரசியலமைப்பின் கீழ் பிரதம மந்திரியாகச் செயற்பட்டார்?
4. இவரது கருத்திற்கேற்ப ஆரம்பிக்கப்பட்ட பல்நோக்குச் செயற்றிட்டம் யாது? (04 புள்ளிகள்)



B

[பக். 2 ஐப் பார்க்க.

## பகுதி II

2. (i) இலங்கையின் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்த மனிதன் பற்றிய தகவல்கள் கிடைக்கும் குகைகள் **மூன்றைப்** பெயரிடுக. (03 புள்ளிகள்)

(ii) ஆரிய வருகையாளர்கள் தமது குடியேற்றங்களை அமைப்பதற்காகத் தெரிவுசெய்த இலங்கையின் உலர் வலயத்திலுள்ள நதிக்கரைகள் **நான்கைக்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) இலங்கையின் உலர் வலயத்தைப் போன்று பரம்பிக் காணப்பட்ட குடியேற்றங்கள் மத்திய மலைநாட்டினுள் **காணமுடியாமைக்கான** காரணிகள் **இரண்டை** விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) ஆரியர் பிற்காலத்தில் நீர் வழங்கல் பற்றிக் கவனம் செலுத்தியது ஏன் என்பதை **மூன்று** காரணிகளின் மூலம் விளக்குக. (06 புள்ளிகள்)

3. (i) A - அபய வாவி

B - திசா வாவி

C - மின்னேரியாக் குளம்

போன்றவை எந்த ஆட்சியாளரால் நிர்மாணிக்கப்பட்டதென்பதை ஒழுங்குமுறையில் தருக. (03 புள்ளிகள்)

(ii) கீழே A, B, C, D மூலம் தரப்பட்டுள்ள தகவல்களுக்குரிய விடைகளை அடைப்புக்குறிக்குள்ளிருந்து தெரிவுசெய்து ஒழுங்குமுறையில் எழுதுக.

A - கலா வாவியிலிருந்து திசாவாவிக்கு நீரை எடுத்துச் செல்லும் கால்வாய்

B - அம்பன் கங்கையிலிருந்து பராக்கிரம சமுத்திரத்திற்கு நீரை எடுத்துச் செல்லும் கால்வாய்

C - வாவியொன்றின் மேலதிக நீரை வெளியேற்றுவதற்காக மேற்கொள்ளப்பட்டுள்ள தொழினுட்ப நிர்மாணம்

D - வாவியொன்றின் நீர் அமுக்கத்தைச் சமநிலைப்படுத்தி மடைக்கதவிற்கு நீரை விடுவிப்பதற்கு அமைக்கப்பட்டுள்ள நிர்மாணம்

(கலிங்கல் தொட்டி, எலகர கால்வாய், வான்கதவு, ஜய கங்கை, அங்கமெடில்ல கால்வாய், அலைதாங்கி, மினிப்பே கால்வாய், உள்வரும் வான்கதவு) (04 புள்ளிகள்)

(iii) வாவி மற்றும் கால்வாய்களை நிர்மாணிக்கும்போது புராதன நீர்ப்பாசன நுட்பவியலாளர்கள் தரைத்தோற்ற வேறுபாடுகளைப் பயன்படுத்தியுள்ள விதத்தை **இரண்டு** காரணிகள் மூலம் விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) பொலன்னறுவைக் காலத்தின் பின்பு நீர்ப்பாசன நிர்மாணம் தொடர்பான ஆட்சியாளரின் கரிசனை **இல்லாதொழிந்தமைக்கான** காரணங்கள் **மூன்றை** விளக்குக. (06 புள்ளிகள்)

4. (i) A - அரசனின் திறைசேரிக்குப் பொறுப்பானவர்

B - அரசனின் கொடிக்குப் பொறுப்பானவர்

C - அரசனின் மங்கள வாளுக்குப் பொறுப்பானவர்

போன்றோருக்கு வழங்கப்பட்ட உத்தியோகபூர்வப் பெயர்களை ஒழுங்குமுறையில் தருக. (03 புள்ளிகள்)

(ii) கீழே A, B, C, D யின் மூலம் வழங்கப்பட்டுள்ள தகவல்களுக்குரிய நபர்களை ஒழுங்குமுறையில் தருக.

A - முதற்றடவையாக இலங்கையின் கிராம எல்லைகளை வரையறுத்த மன்னன்

B - மகாவம்சத்தில் குறிப்பிடப்பட்டுள்ள நீதி வழுவாது ஆட்சி செய்த அநுராதபுர சோழ மன்னன்

C - மின்னேரியத் தெய்வமாகப் போற்றப்பட்ட மன்னன்

D - 'கலிகால சாஹித்திய சர்வக்ஞ்ச பண்டித' எனும் பட்டப் பெயரால் அழைக்கப்பட்ட மன்னன் (04 புள்ளிகள்)

(iii) மிகவும் சிறிய நிர்வாக அலகான கிராமிய நிர்வாகம் மேற்கொள்ளப்பட்ட விதத்தை **இரண்டு** விடயங்களின் மூலம் விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) நாட்டு மக்கள் மன்னரால் நிறைவேற்றப்பட வேண்டுமென எதிர்பார்த்த சேவைகள் யாவை என்பதை **மூன்று** காரணிகளின் துணையுடன் விவரிக்குக. (06 புள்ளிகள்)

5. (i) போர்த்துக்கேயர் வருகை தந்தபோது இந்நாட்டில் காணப்பட்ட பிரதான இராசதானிகள் **மூன்றைப்** பெயரிடுக. (03 புள்ளிகள்)

(ii) பின்வரும் வரலாற்று நிகழ்வுகளுடன் சம்பந்தப்பட்ட நபர்களை A, B, C, D ஒழுங்குமுறையில் தருக.

A - காலியில் தரையிறங்கிய முதலாவது போர்த்துக்கேய கடற்படைத் தலைவன்

B - டிக்கரி இளவரசன் எனும் பெயரால் அறியப்பட்ட சீதாவாக்கை மன்னன்

C - 'இஞ்சி கொடுத்து மிளகு வாங்கியது போல' எனும் பழமொழியுடன் தொடர்புடைய மலைநாட்டு மன்னன்

D - மலைநாட்டின் இறுதி நாயக்கர் வம்ச மன்னன் (04 புள்ளிகள்)

[பக். 3 ஐப் பார்க்க.

(iii) போர்த்துக்கேயரைப் போன்று ஒல்லாந்தரும் மலைநாட்டைக் கைப்பற்ற முடியாமற் போனமைக்கான காரணங்களை **இரண்டு** விடயங்களின் மூலம் விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) 1815 ஆம் ஆண்டாகும்பொழுது பிரித்தானியர்கள் மலைநாட்டைக் கைப்பற்றிக் கொள்வதற்கு சாதகமாயமைந்த காரணிகள் **மூன்றை** விவரிக்குக. (06 புள்ளிகள்)

**6.** (i) பிரித்தானியரால் இந்தியாவில் வர்த்தகக் களஞ்சியங்கள் நிறுவப்பட்ட நகரங்கள் **மூன்றைத்** தருக. (03 புள்ளிகள்)

(ii) பிரித்தானியருக்கு இலங்கையைக் கைப்பற்றுவதற்கு அவசியமான காரணிகள் **இரண்டைக்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) 1848 இல் இந்நாட்டில் ஏற்பட்ட பிரித்தானியருக்கெதிரான போராட்டங்களில் கோல்புறூக் - கமரன் சீர்த்திருத்தங்கள் செல்வாக்குச் செலுத்திய விதத்தை **இரண்டு** காரணிகள் மூலம் விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) (*a*) இந்நாட்டில் பௌத்த, இந்து, இஸ்லாம் சமய மறுமலர்ச்சியை ஏற்படுத்துவதில் முன்னின்று செயற்பட்டவர்கள் ஒவ்வொருவர் வீதம் ஒழுங்குமுறையில் பெயரிடுக.

(*b*) அவர்களுள் நீங்கள் விரும்பும் எவரேனும் ஒருவரின் சேவை பற்றி உதாரணங்களுடன் சுருக்கக் குறிப்புகள் தருக. (06 புள்ளிகள்)

## பகுதி III

**7.** (i) இந்தியா, வெளியுலகுடன் தொடர்புகளைக் கொண்டிருந்த அதன் வடமேற்கில் அமைந்துள்ள கணவாய்கள் **மூன்றைக்** குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) பின்வரும் A, B, C, D யின் மூலம் தரப்பட்டுள்ள தகவல்களுக்குப் பொருத்தமான விடைகளை அடைப்புக்குறிக்குள்ளிருந்து தெரிவுசெய்து ஒழுங்குமுறையில் எழுதுக.

A - ஆரியர் வருகைக்கு முன்னர் இந்தியாவில் நிலவிய நாகரிகம்

B - ஆரியக் குடிகள் இந்தியாவின் தெற்கில் பரவுவதில் தடையாக அமைந்த மலைத் தொடர்

C - ஆரியரின் பூர்வீக பூமியாகக் கருதப்படும் பிரதேசம்

D - இந்தியாவை ஆக்கிரமித்த முதலாவது கிரேக்கப் பேரரசன்

(விந்திய, நைல் நதிக்கரை, மகா அலெக்சாந்தர், ஸ்டெப்ஸ், ஈரான், அரகன்யோமா, சிந்து நதிக்கரை, செலியுகஸ் நிகேடர்) (04 புள்ளிகள்)

(iii) வேத காலத்தில் பொருளாதார நடவடிக்கைகள் ஒழுங்கமைந்திருந்த விதம் பற்றி **இரண்டு** விடயங்களின் மூலம் விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) அசோகச் சக்கரவர்த்தியின் சமயப் பணிகளை **மூன்று** விடயங்களின் மூலம் விளக்குக. (06 புள்ளிகள்)

**8.** (i) A - முதலாம் உலக மகா யுத்தத்தின்போது ஜேர்மனியப் படைகளால் மூழ்கடிக்கப்பட்ட அமெரிக்கப் பயணிகள் கப்பல்

B - முதலாம் உலக மகா யுத்தத்தின்போது தலைமை தாங்கிய ஜேர்மன் பேரரசன்

C - இரண்டாம் உலக மகா யுத்தத்தின் பின்னர் உருவான சர்வதேச அமைப்பு

ஆகியவற்றுக்கான விடைகளை ஒழுங்குமுறையில் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) (*a*) நாசிசத்தின் அரசியல் தலைவரையும், பாசிசத்தின் அரசியல் தலைவரையும் முறையே தருக.

(*b*) நாசிசத்தின் சிறப்பியல்புகள் **இரண்டைக்** குறிப்பிடுக. (04 புள்ளிகள்)

(iii) இரண்டாம் உலக மகா யுத்தத்தின் பின்னர் உலக அரசியலில் ஏற்பட்ட மாற்றங்கள் **இரண்டைச்** சுருக்கமாக விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) யுத்தமொன்றில் எப்போதும் ஏற்படுவது பேரழிவுகள் என்பதை இரண்டாம் உலக மகா யுத்தத்தை அடிப்படையாகக் கொண்டு உதாரணங்கள் மூலம் விளக்குக. (06 புள்ளிகள்)

**9.** (i) குடியேற்றங்களை நிறுவிய ஐரோப்பிய இனங்கள் **மூன்றைக்** குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(ii) பின்வரும் A, B, C, D யினால் காட்டப்பட்டுள்ள புதிய கண்டுபிடிப்புகளுக்குரிய நபர்கள் யார் என்பதை அடைப்புக்குறிக்குள்ளிருந்து தெரிவுசெய்து ஒழுங்குமுறையில் எழுதுக.

A - ஈர்ப்பு விதி

B - தொலை நோக்கி

C - நீராவி புகையிரத எஞ்சின்

D - தொலைபேசி

(அலெக்சாந்தர் கிரஹம்பெல், சேர் ஐசாக் நியூற்றன், கலிலியோ கலிலி, ஜோர்ஜ் ஸ்டீவன்சன், றொபர்ட் புல்டன், சாமுவேல் மோர்ஸ், ஹம்பிரி டெவி, ஜோன் கே) (04 புள்ளிகள்)

[பக். 4 ஐப் பார்க்க.

(iii) கைத்தொழிற் புரட்சியினால் உலகின் போக்குவரத்துத் துறையில் ஏற்பட்ட முன்னேற்றங்கள் குறித்து **இரண்டு** விடயங்கள் மூலம் விளக்குக. (05 புள்ளிகள்)

(iv) கைத்தொழிற் புரட்சியினால் உலகில் விரும்பத்தகுந்த மற்றும் விரும்பத்தகாத விளைவுகள் ஏற்பட்டமையை உதாரணங்களுடன் விவரிக்குக. (06 புள்ளிகள்)

**10.** (i) இந்தியாவில் தோன்றிய பிரதான சமயங்கள் **மூன்றைப்** பெயரிடுக. (03 புள்ளிகள்)

(ii) பின்வரும் A, B, C, D யினால் காட்டப்பட்டுள்ள ஒவ்வொரு விடயத்திற்குமான விடைகளை அடைப்புக்குறிக்குள்ளிருந்து தெரிவுசெய்து ஒழுங்குமுறையில் எழுதுக.

A - இஸ்லாம் சமயத்தின் ஆரம்பகர்த்தா

B - இஸ்லாம் சமயத்தின் புனித நூல்

C - இந்தியாவின் முதலாவது முகலாய ஆட்சியாளர்

D - இந்தியாவின் துங்கபத்திரா நதிக்கரையில் ஆரம்பமான சுதந்திர இந்து இராச்சியம்

(பகமன், விஜயநகர், தம்மபதம், குரான், முஹம்மது நபி அவர்கள், கலீபா அபூபக்கர், பாபுர், ஜஹாங்கீர்)

(04 புள்ளிகள்)

(iii) மஹா அக்பர் மன்னன் முகலாய அரச வம்சத்தின் சிறந்த ஆட்சியாளர் எனக் கருதப்படுவதற்கான காரணங்களை **இரண்டு** விடயங்கள் மூலம் விவரிக்குக. (05 புள்ளிகள்)

(iv) பிரித்தானிய ஆட்சியாளர்களிடமிருந்து இந்தியாவை மீட்டெடுக்க மஹாத்மா காந்தி பின்பற்றிய நடவடிக்கைகள் **மூன்றை** விவரிக்குக. (06 புள்ளிகள்)

* * *


Department of Examinations Sri Lanka

15715

OL/2017/33-STE-II (OLD)



පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

33 STE II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

ඉතිහාසය II
வரலாறு II
History II

1. (අ) (i)
1. (அ) (i)
1. (a) (i)

විභාග අංකය
சுட்டெண்
Index No. ..............................



